உ
சிவமய ம்.

# வீராக மம்.

திருமழி சை
சாந்தலிங்க சுவாமிகள்
திருவாய்மலர்ந் தருளியது.

இஃ
காஞ்சீபுரம் ம து
உஜினி மருளாராத்தி டத்துவீதி
ரியர் பெரியமடம்
ஸ்ரீசிவலிங்க தசிகேந்திர
சுவாமிகளா தீனத்து
சீடராகிய, காஞ்சீபுரம் இராஜாம்பேட்டை
மு. சி. சின்ன ாசாமி ஐயர்
அவர்கள ாலும்,

காஞ்சீபுரம் பச்ச கந்தையர் மடம்
தி. அண் முமலையர்
அவர்கள ாலும்

2-வது
ஞ்சீபூஷண பதிப்பு,
ப்பிக்க அச்சியந்திரசாலையில்
ப்பட்டது.

19 11. [அணா 1.

உ

சிவமயம்.

# வீராகமம்.

திருமழிசை

## சாந்தலிங்கஸ்வாமிகள்.

திருவாய்மலர்ந்தருளியது.

இஃது

காஞ்சிபுரம் மடத்துவீதி

உஜ்ஜினி மருளாராத்திரியர் பெரியமடம்

ஸ்ரீசிவலிங்கதேசிகேந்திர

சுவாமிகளாதீனத்து

சீடராகிய, இராஜாம்பேட்டை

மு. சி. சின்னசாமி ஐயர்

அவர்களாலும்,

காஞ்சிபுரம் பச்சகுந்தையர் மடம்

தி. அண்ணமலையர்

அவர்களாலும்

ஸ்ரீ காஞ்சீபூஷண அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை 1911. அணா 1

# பிரசித்தப்பத்திரிகை.

---

இப்புத்தகம் வேண்டுவோர் காஞ்சீபுரம் ஆடிசன்பேட்டை டோர் 4நெ. ஷாப் சின்னசாமிஐயரிடத்திலும், ஷை யூர் இராஜாம்பேட்டைத்தெருவு 47-நெ. வீடு இரத்தினஐயரிடத்திலும், ஷையூர் கருக்கினிலமர்ந்தவள்கோவில் தெருவு 45-நெ. பச்சகந்தையர்மடம் அண்ணாமலைஐயரிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

---

உடனே அச்சிடும் புஸ்தகங்கள்.

பரம[illegible]திய சடுவ்ஸ்தலம்.

வீ[illegible]த்தின் ஆசாரவிளக்க வினாவிடை.









உ

# வீராகமம்.

## விநாயகர்காப்பு.

அரியசஞ்சிதமகலவும்
புரியுடம்பிடரொழியவும்
விரியுநம்பவமெரியவுங்
கரிமுகன்கழல்கருதுவாம்.

## நூல்.

சோதிகுருபரன் சரணந்தொழுது சிரமிசையிருத்தி
நீதிதருங்குருலிங்கசங்கமத்தினிலைமையெல்லா
நாதனுமைக்குரைத்ததனைநயந்துலகெணல்லமைய
ஓதியநற்கருநடத்தின்பயன்றமிழாலுரைத்திடுவோம். (1)

சீரிசைத்தவீரசைவத்திறமதனையல்லமைய
ரேரிசைத்ததவமுனிவர்க்கினிமையுடனுரைத்ததையான்
பாரிசைத்ததென்மொழியாற்பகர்வதுலகேழுமொரு
சீரைவித்திலடக்கநினைந்திடுமூடர்கிரிநெறியே. (2)

நிலவுலகாயுதமுதலாநீடுவயிணவமீரு
மலகில்பலசமயமுமற்றியாவுமுதித்தொடுங்கிடமா
முலகுபுகழ்வீரசைவசித்தாந்தத்துண்மையினை
யலையுமனத்தறிவிலியேமறிந்தபடிமொழிந்திடுவாம். (3)

## வேறு.

தெரிவரும் பவியதாகிச் சிவலிங்கார்ச்சனையிலாமற்
குருவருண்மந்திரத்தைக் குறித்தவனிருபாதத்தைப்
புரைவிலாமனத்தினாலே பூசைசெய்துலகவாழ்க்கை
யருவராதமர்ந்துவாழ்வோ னவன்பூர்வசைவனாவான். (4)

தெளியமும்முதலுமொன்றுச் சிந்தித்துச்சிரவணேதுங்
களிதருமந்திரத்தாற் கருத்துறப்பீடமீதே
யளிதரவரனைப்பூசித் தடியரைக்காணிற்கண்க
ளிகொளவணங்கிவாழ்வோன் சுத்தமாஞ்சைவனாவான். (5)

பேசுமிவ்விருசைவத்தும் பெருமையாங்குருநேயத்தி
னசையாயங்கலிங்கி யாகியேகரபீடத்திற்
பூசைசெய்துலகாசாரம் பொருந்திநற்பாததீர்த்த
மாசறக்கொள்வோன்றானே மார்க்கசைவத்தனாவான். (6)

பூருவசைவமென்றும் புகழ்சுத்தசைவமென்றுஞ்
சாருமிங்கிதற்குமேலாய்த் தருமார்க்கசைவமென்று
நேருமிச்சைவமூன்று நெறிபெறவணங்கிவாழும்
வீரசைவத்தினீதி விளங்கவே விரித்துச்சொல்வாம். (7)

அத்தனாரலகில்சோதி யையயர்மெய்ச்செல்வந்தானு
நித்தமாங்கருணையாலே நிகழ்சிவபோகமான
வித்திலாப்பயிரன்பர்க்கு விளைந்திடப்பத்தியென்னு
மெத்துமாமழைபொழிந்து வளர்ப்பதும் வீரசைவம். (8)

விரிவுறுமேழுபேத வினைவழியோனிதோறுந்
திரிதருபவமகற்றிச் செறிந்திடுமுயிர்கட்கெல்லாம்
பெருகியசித்திமுத்தி பிரசன்னராகவேண்டு
மரியநல்வரங்களெல்லா மளிப்பதும்வீரசைவம். (9)

வஞ்சகப்புலன்களாகு மதமலிவேழந்தன்னை
யஞ்சவேமிரித்துநூறி யடர்ப்பதுமன்பர்க்கென்று
முஞ்சியபவவித்தானமும் மலச்சேறுநீக்கும்
விஞ்சியபரமஞான வெள்ளமும்வீரசைவம். (10)

பகர்தருசைவம்பாசு பதமகாவிரதங்காளா
முகமிருவாமநீடு வயிரவமுதலாயுள்ள
வகமலிசமயத்தோர்க ளவரவர்நிலைமைக்கேற்றத்
தீகைமிகுமுத்தியின்பந் தருவதும்வீரசைவம். (11)

பரவுலகாயுதாதி பாஞ்சராத்திரியீறுகத்
திரமிகுசமயத்தோர்க டிருக்கினையடவேநீக்கித்,
தரமிகுஞ்சைவத்தாக்கிச் சரிதைநான்கியற்றப்பண்ணி
விரவியபரமஞானந் தருவதும்வீரசைவம். (12)

முந்தியமூலத்தாகு முக்குணமயக்கினாலே
சிந்தைகொள்காமமாதி விடயமாஞ்சீர்மைக்கேகு
மந்தரைத்தடுத்துநீங்கா மலமாயைகன்மமென்னும்
பந்தமதகற்றிஞானம் பணிப்பதும்வீரசைவம். (13)

ஒருமலவருக்குணின்று வுருவுகொண்டெதிரேநின்றிங்
கிருமலவருக்குமூன்று மலவருக்கெம்போல்வந்து
திரிமலவிருளைநீக்கிச் செறியுமாருயிர்கட்கெல்லா
மரியவானந்தமுத்தி யளிப்பதும்வீரசைவம். (14)

புன்னெறிசமயத்தோர்கள் புகன்றிடுமவமொழிக்குத்
தன்னிருசெவிகொடாமற் றடுத்தருணையத்தாலே
மன்னியவிலிங்கநிட்டை புரிந்திடுமெகிமைநல்கிக்
கொன்னமர்பரமானந்தங் கொடுப்பதும்வீரசைவம். (15)

அன்னியசைவர்தம்பாற் றீக்கைகொண்டயன்மாலாதி
மன்னியசகலத்தோரை வணங்குவோர்மதம்புகாம
லுன்னருமேகலிங்க நிட்டையினுறுதிகாட்டித்
தன்னிகரிலாதவின்பந் தருவதும்வீரசைவம். (16)

மேதகுஞானத்தீயாற் றகனஞ்செய்மேனிதன்னைப்
பூதவாரழலிற்போக்கும் புன்னெறிச்சமயத்தோர்தந்
தீதுறுநெறியைநீக்கித் திகழ்சிவலிங்கநிட்டை
யாதரவதனுலன்பர்க் களிப்பதும்வீரசைவம். (17)

தங்குலமகிமைநோக்கிச் சங்கரனடியார்க்கென்று
மங்கியசாதிபேத முரைத்தவர்மனையிரப்போ
னிங்கெமக்காகாவென்னு மீனருக்கூமன்கண்ணில்
வெங்கதிர்நிலைமைபோல நிற்பதும்வீரசைவம். (18)

அட்டமியேகாதேசி யலர்மதிவாரமாதி
யொட்டியவிரதஞ்சீல முடலொறுத்திடுமுபாதி
நிட்டையாம்பசுஞான த்தி னிலைபெறுநெறிகள்யாவும்
விட்டிடவுண்மைஞான மளிப்பதும்வீரசைவம். (19)

மாசுறுமுலகமாயச் சுழிபட்டுமறிந்தோர்தம்மை
யாசையாலவரேதேவ ராமவருண்மரென்றே
காசைவாசந்தனக்குக் கைப்பலிவைத்துப்போற்று
நீசருக்கிருளதாகி நிற்பதும்வீர்சைவம். (20)

ஆருயிரிருக்கவிங்கே யரனடியடைந்திடாம
லாருயிரகன்றபின்ன ரவ்வுயிரெரியிற்சுட்டே
கூறியபரிவான்முத்தி கூட்டுதற்கென்புகொண்டே
யூர்தொறுமுழலுமூமர்க் குணரொணவீரசைவம். (21)

அனநடையுமையாள்பாக னைமமாறெழுத்தைநிந்தித்
தினமலிதேவர்நாம மினிதெனச்சிந்தித்தேத்தி
மனமுறுங்கொடியபஞ்ச பாதகமடைவோர்க்கென்றுங்
கனவிலுமுணரொணத கற்பதும்வீரசைவம். (22)

உயிர்செகுத்தூனுண்போரு முணர்வறநறவுண்போருஞ்
செயிர்தருபவிசடாமு முறவெனச்செறிந்தபோதி
லயர்வுறவெதிர்கொண்டுள்ளே யழைத்திடும்புல்லரான
கயவருக்குணரொணாத கற்பதும்வீரசைவம். (23)

ஓதரும்பிராணலிங்க முயிர்க்குயிரென்றோராமன்
மேதகுமிலிங்கத்துக்குந் தனக்கும்வேறாகக்கொண்டே
கோதுறுமனத்தினாலே குறித்தருச்சனையேசெய்யுஞ்
சூதகர்க்குணரொணாத சூட்சமும்வீரசைவம். (24)

இட்டலிங்கத்தையெண்ணா தவமதித்திந்தப்பார்மேன்
மட்டறுதீர்த்தலிங்கம் வணங்குதல்கதியாமென்று
நெட்டிடைத்தூரமேக நினைந்திடுமடவரான
முட்டருக்குணரொணாத முதன்மையும்வீரசைவம். (25)

காதலன்பிராணலிங்கி காரிகைப்பவியாமாகில்
வேதியன்புலைச்சிதன்னை விரும்பியேமருவலொக்கும்
போதியாதவர்களில்லிற் பொசித்திடுந்தீயரான
பாதகர்க்குணரொணாத பான்மையும்வீரசைவம். (26)

எல்லையிறவத்தினாலே யிறையடிவழுத்தப்பெற்று
மல்லலாம்பிறவிநீக்கு மரனடியடைந்திடாம
னல்லவானவர்களின்ப நயந்தருச்சனையில்வேண்டும்
புல்லராலறியொணாத பொற்பதும்வீரசைவம். (27)

இரவிபோலுலகமெங்கு மேகனேகுருவெண்ணாமன்
மருவிடுமனைவிதானு மகிணனும்வேறதாகக்
குருவினைப்பகுத்துத்தீக்கை கொண்டிடுமூடரில்லிற்
பருகுவோர்க்குணரொணாத பான்மையும்வீரசைவம். (28)

கோவணம்போகமாடை கூட்டரவகன்றநீர்மை
காவரும்பொறைமுந்நூல்கப் பறையவிகாரந்தண்டோ
ரோவிலம்புலனைவாட்டுமொளிதிகழ்ஞானமாகுந்
தாவின்முத்திரையோரைந்துஞ் சங்கமந்தரிப்பதாமே. (29)

சத்தியஞ்சவுசமாகச் சாந்தநீறலைவிலாத
சித்தமேயுருத்திராக்கஞ் சின்மயமியோகவேட்டி
நித்தியானந்தங்கந்தை நிராமயங்கிரீடமென்றுந்
தத்வம்பாதுகையதாகச் சங்கமந்தரிப்பதாமே. (30)

செறிதருகாரணநான்குஞ் சிவதாரமாகுஞ்செச்சை
யறிவதாம்பிரிவிலாத வானந்தமுதகமாகும்
வெறியலராமுதமாகு மிக்கமெய்ப்பத்திஞேயங்
குறிநவபேதமேக மாகியகொள்கையோர்க்கே. (31)

அற்பகலுணராரைவ ரரும்பெருஞ்செல்வம்பேணர்
கற்பனைவிகற்பமில்லார் கன்மமீறுதிப்பொன்றில்லார்
பொற்புறுமிலிங்கலீலைப் பொலிவலால்வேறுகாணர்
சிற்பரவீரசைவத் திறத்தினைவிரும்புஞ்சீலர். (32)

நிறைகுறைவிரண்டுமில்லார் நினைப்புடன்மறப்பொன்றில்லார்
மறைநெறிமருட்சியில்லார் வையகப்பொய்யிலாழார்
தறைமுதற்சிவமதீறுந் தத்துவாதீதவின்பஞ்
செறிதருவீரசைவத் திறத்தினைவிரும்புஞ்சீலர். (33)

உயிரளித்துடனேவாங்கி யொடுக்கிடும்பிரேதலிங்கம்
பயில்வுடனருச்சித்தேத்தும் பதகரைப்பரிசித்தோர்கள்
செயிர்புனதீக்கைகொள்ள வேண்டிடுஞ்செய்யாராகி
லயர்நரகனைத்துமூழ்கி யரும்புலையருக்காளாமே. (34)

சரமநம்புரிசோமாசி சன்னியாசத்தோர்நூல்க
ளதிகமாவல்லரேனு மங்கலிங்கிகளல்லாத
மதவரைப்பரிசித்தாலு மலிபுனதீக்கைவேண்டுந்
திதமலிவீராசார பத்தராஞ்சீலத்தோர்க்கே. (35)

முற்றிகழ்வைசவங்காளா முகம்பாசுபதமுன்னுகு
நற்றவர்முந்நூல்வேணி நயந்துதம்மங்கலிங்கம்
பற்றிலாதவரைத்தீண்டிற் பகர்புனதீக்கைவேண்டுஞ்
செற்றமில்வீராசார நெறிபுரிசீலத்தோர்க்கே. (36)

மாலயனிரவிசோமன் மகபதிமுதனுலெட்டோர்
மேலுபர்கோடிதேவ ராயினும்விமலரேனுங்
கோலமாமங்கலிங்க மில்லையேற்குறித்துநோக்கார்
சீலமாம்வீராசார நெறிபுரிதிறலினோரே. (37)

பொருவருமுயிர்கட்கெல்லாம் புகலருமின்பமுத்தி
யிருவினையகற்றினல்லா லெய்தொணாவின்பதுன்பந்
தருவினையகற்றுமேனி சங்கமமாதமென்றே
பரிவுறுபிறவிநீக்கும் பக்குவரறிந்துபோற்றும். (38)

சங்கமம்பொருளெண்ணாமற் றுபரம்விரும்பியேந்தி
லங்கவர்பெறும்பேறில்லை யண்ணலாராணைதிண்ணஞ்
சங்கமபூசைதானே தருதருலிங்கவேட
மங்கவைமூன்றுமொன்று யற்புதமாகுமன்றே. (39)

அங்கலிங்கத்தையெண்ணா தயர்ப்பதிதீர்த்தலிங்கம்
பொங்கியபரிவுகூரப் போய்ப்பணிந்திடுவோர்சீர்மை
மங்குறுகளவிற்சோர மகிணன்பால்மணம்புணர்ந்த
வங்கணவனையுங்கொண்டு சாருநாரியர்நேராமே. (40)

மாண்பயிலிலிங்கமில்லார் மற்றொருபதியிற்சென்றே
காண்பருமிலிங்கநாடிக் கருத்துறவணங்கல்கண்டுஞ்
சேண்பயிலிலிங்கமங்கத் திருக்கவுஞ்சிந்தைசெய்யார்
வீண்பகலகற்றுந்தீயர் விதிவசமந்தோவந்தோ. (41)

அங்கலிங்கத்தோரெல்லா மரன்றிருவுருவமாவா
ரங்கலிங்கத்தோரென்று மாக்கமுமழிவுமில்லா
ரங்கலிங்கத்தைநீங்குந் தானவாழலின்மாய்ந்தா
ரங்கலிங்கத்தைநீங்கா முனிவருமருள்பெற்றாரே. (42)

குலகுணவிசிட்டரேனுங் குணங்குலமில்லாரேனுஞ்
சலமதிமுடியார்வேடந் தரித்தவர்தமைக்கண்டோர்க
ணலமுடனெதிர்சென்றேத்தி யாசனநல்காராகி
லலமுறுதுயரநீங்கா ரவுரவநரகில்வாழ்வார். (43)

அராவணிவேணியண்ண லடியவர்தமைநிந்தித்தோர்
வராகமாயனேகஜன்ம மலமதுபொசித்தபின்னர்
தராதலமிசையேபொல்லாச் சண்டாளர்க்கடிமையாகிப்
பராவுறும்பசியாநோயாற் பயத்தினால்வருந்துவாரே. (44)

முழுத்தவவேடத்தோரை முனிந்துநிந்தித்தோரந்தப்
பழிப்புரைகேட்டோர்தீய படிரரைக்கோறல்செய்யா
வழுக்குமன்னவனுந்துன்பத் தழுந்துவனடியார்பாதம்
வழுத்துமன்பரைக்கண்டோர்கள் மருவுவர்பரமலோகம். (45)

அருஞ்சிலையதனாற்றேவ ராக்கியாலயமுமந்த
விருஞ்சிலையதனாற்செய்யி னிரண்டுமொன்றென்னலாமோ
தருந்தவவேடம்பூண்டு தமருடனிருந்தோர்தம்மை
வருங்குலமதிலொன்றாக மதிப்பவரலகையொப்பார். (46)

தேனுமாமகவனேகந் தெரிவையர்கோடிகோடி
மானுமாமறையோர்கோடி வதைத்ததிற்கோடிபாவங்
கோனுமாபதியோனாணை குருலிங்கசங்கமத்தின்
மேனிமேலுதிரம்பூமே லொருதுளிவிழினுமன்றே. (47)

இணக்குறுதோற்றநான்கி லெழுவகைபேதமான
கணக்கறுமீராரேழு கருநெறியோனிதோறும்
வணக்குமும்மலரும்போத மருளுறும்பிறவித்துன்பப்
பிணக்கறுமவரேலிங்க சங்கமம்பேணுவோரே. (48)

உயிரிரக்கங்களோரா தும்பரைப்போற்றும்பேறு
மயிரிலக்காகுமென்று மாலயன்றன்னைப்போற்றல்
செயிர்தருவரையிலக்காஞ் சிவனடியவரைப்போற்ற
னயமிகுபுவியிலக்காய் நாட்டியசிலையொப்பாமே. (49)

கண்ணுதல்சரணர்தம்மைக் காமுறத்தொழுதுபோற்று
மண்ணுலகாளவேண்டின் மைந்தருஞ்செல்வம்வேண்டில்
விண்ணுலகெய்திடாமல் விரிநரகேழுமூழ்க
வெண்ணமதுடையீராகி லிடர்செயக்கருதுவீரே. (50)

அரனடியவர்க்கன்பாக வாதனமாடையன்னங்
கரிபரிசிவிகையாதிக் கனகநன் மணிகளியாவும்
பரிவுடன்மாசெண்ணும லளிப்பவர்பாத்திலேய்வர்
வரமவைவேண்டிநல்கின் மனநினைவெல்லாமாமே. (51)

பொன்னவமணிகணல்கிற் புரந்தரன்வணங்கவாழ்வா
ரன்னமோடுதகநல்கி லரியயன்பரவவாழ்வா
ருன்னருஞ்சுரபிநல்கி லுருத்திரகணேசராவார்
மன்னியவீசனன்பர் மகிழ்வுறவணங்கிநின்றே. (52)

அருந்தவமகேசர்வெய்யி லழலுறச்சிறகிணலே
பருந்ததுநீழல்செய்த பலமதற்கெழுபார்முற்றும்
விரிந்தொருகவிகைநீழல் வேந்தெனப்புரந்தனென்றாற்
பெருந்தவர்க்ககமுண்டாக்கப் பெறுமவர்பேறென்சொல்லாம். ()

அறுசுவையடிசிலீச னடியவர்க்களித்திடாம
லுறவுடன்றுபாங்கட் குபசரித்துட்டுநேயஞ்
செறிதருமாண்பாலுண்ணு மாவினைச்சினந்துசாடி
வறியதோராவைநாட்டி மற்றதற்கருத்துமாறே. (54)

அறலருஞ்சுரபிக்கியி லமுதமேயளிக்குங்கீரம்
திறலரவினுக்குநல்கில் விடமுதவிடுமோபோல
விறையடியவர்க்கேதேனு மீந்தவர்முத்திசேர்வார்
கறையவர்க்கினியதீந்துங் கடுநரகடைவரன்றே. (55)

சத்திருசரணஞ்சாகாத் தாடலைவேகாச்சீவன்
சுத்தமாம்பரமானந்தத் தோயவாரிதியின்மூழ்கி
யத்தன்மெய்ஞ்ஞானத்தீயா லரும்பசுமலநீறாக்கி
நித்தநீறணிவோருண்மை நீறிடுந்தொண்டராமே. (56)

நீறுகோமயமதாகா நெய்யிருங்கீரமாகாச்
சாறுகோதாகாமீண்டுந் தண்டுலநெல்லதாகா
கூறுதாம்பிரம்பொன்னாகிற் குலவுமுற்செம்பதாகா
வாறுபோலாசரன்பாத மருவுவோர்பவம்புகாரே. (57)

மேருவிலிருந்துவேறு வெறுக்கைதேடுவோர்போலு
நீரமூழ்கியுநீருண்ணா நாவரண்டயர்வார்போலுஞ்
சீரியலிலிங்கமங்கத் திருக்கமுத்தியினைத்தேடிப்
பாரிடையுழலுமாந்தர் குருபதம்பற்றிலாரே. (58)

குரவரைமனிதராகக் குறிப்பவர்குருத்துரோகர்
மருவுலிங்கத்துரோகர் மற்றொன்றைவணங்குவோர்கள்
பொருவில்சங்கமவேடத்தைப் புனைந்ததினெறிநிலாம
லருமவத்தொழில்கள்செய்யு மவர்கள்சங்கமத்துரோகர். (59)

அடுத்ததின்றன்மையான்மா வாகுமென்றறிந்தநல்லோர்
நடித்திடுஞ்சமயவாத நற்றவஞ்செபந்தியானம்
படிற்றுலகியற்கையாவும் பாகதிவிலக்காமென்றே
விடுத்தருட்குரவன்பாத மேவிமெய்ப்பணிசெய்வாரே. (60)

இருவினைப்பயனுஞ்செய்தி யாமறிந்தருந்தமாட்டோ
மிருவினையறிந்துகூடா திறையறிந்தருத்துமென்றே
திருகுநம்போதமான சிற்றறிவகன்றுஞானக்
குருபரனருள்பெற்றோர்கள் கருநெறிகுறுகிடாரே. (61)

பருவரையனேகமென்னக் குவித்துமண்பரவையேழுந்
தருபுனலனைத்துங்கொண்டு சவுசமுற்றிடினுமேனைக்
கருமலமகலாதென்றுங் கருணையானம்போல்வந்த
குருவருட்பார்வையாலே மலமெலாங்குலைந்துபோமே. (62)

சலமெனும்ஸ்நானந்தானே தகமலிமலாதிநீக்கு
நிலவுமந்திரஸ்நானந்தா னிகழ்சதாசுத்தியுண்டாம்
பலமுறுபற்பஸ்நானம் பாவங்களனைத்தும்போக்கு
முலவுமெய்ஞ்ஞானஸ்நான முயர்சிவமுத்திநல்கும். (63)

சீடனற்குணர்ந்தேர்ந்தாசான் சிந்தைகூர்ந்தந்தணர்க்கு
நாடியவருடமூன்றி னரபதிக்கோராறாண்டின்
மாடுறுவணிகர்க்கொன்பான் வருடத்திற்சூத்திரர்க்குப்
பீடுறுமீராறாண்டிற் பின்னுபதேசஞ்செய்வான். (64)

## வேறு.

துரியமகன்றவிழிச்சோதி தொட்டும்புடவிதனிலுதக
மரியபுவியிலரித்தெடுத்த வம்பொன்னுயரிந்தனங்கடைய
வருவெங்கனலிங்கிவைபோல மாறுக்கருமமலமாயைக்
கருவியகன்றவிடத்துயிரைக் காணுங்குரவனருளாலே. (65)

அவமுந்தியபொய்ப்பவமகற்று மாசான்றிருநாத்தண்டாகுந்
தவமுந்தியபக்குவவுயிரின் றகையார்செவியோனியதாகு
நவமுந்தியமும்மலமகற்று ஞானவிதையஞ்செழுத்தாகுஞ்
சிவமந்திரத்தாலுற்பவித்த சீடன்குருபுத்திரனுமே. (66)

நித்தனுர்பொற்பதமருவு நெறிதானவைகளிரண்டாகும்
பத்திமார்க்கம்விதிமார்க்க மெனவேபகரப்படுமவற்றுள்
பத்திமார்க்கமெய்முத்தி பக்குவருக்கேயுளவாகு
மித்தைநீமெபக்குவர்க்கு விரவும்விதிமார்க்கமதாமே. (67)

சாற்றுமிதனிலலகிறந்த சமயத்தவர்க்காம்விதிமார்க்க
மேற்றமிகுசங்கமசீலர்க் கிசையுமதுபத்தியின்மார்க்க
மாற்றுமிவைபொற்குடம்புடவிக் குடம்போலமலத்தரமாகாப்
போற்றுமருங்சற்பரிவையரும் பொதுமாதரையுநிகராமே. (68)

உள்ளன்பதனுற்குருலிங்கவேடம் பொருளென்றுண்மையுடன்
கொள்ளுமவர்களனைவருக்குங் கூடும்பத்திமார்க்கநிலை
விள்ளுமறைநூன்முதலான விதிமார்க்கத்திற்பொருந்திடினுந்
தெள்ளுஞ்சிவபத்தியின்மார்க்க மில்லார்கதியிற்செல்லாரே. (69)

கமலஞ்செறிந்தவயற்குன்றைக் கருதும்விறன்மிண்டருமூல
நமலங்கடந்ததிறலுடைய ஞானசாரமலாயுதருஞ்
சிமயந்தருமாதுடனுகத் திருந்தாரூர்விருந்தாடும்
விமலன்புறமென்றுரைத்ததுவு மெய்ப்பத்தியதாம்வியன்றே.

கழலுமுடியுமரிபிரமர் கருதற்கரியபரஞ்சோதி
யழலிலிலங்குங்காளத்தி யண்ணலார்தங்கண்ணிணையிற்
பொழியுமருவியெனப்பெருகும் புண்ணீரொழியக்கண்ணப்பர்
விழியையிடந்தப்பியநேய மெய்ப்பத்தியதாம்விதியன்றே. (71)

ஏதமகலுமேகாந்தராம் தேவருடனமணர்
வாதுபகரத்தமதுசிரமரிந்து வலியகாத்தேந்திப்
போதமுறவேயிரவுபகற் புகலேழ்திவசங்கலியாண
வீதிவலங்கொண்டதிசயமு மெய்ப்பத்தியதாம்விதியன்றே.(72)

கொட்டமிட்டவமண்மாயக் கும்பந்தனிற்சேடாதாச
ரிட்டமிக்கச்சுடர்ப்படி கவிலிங்கமெடுத்துக்காட்டியதுந்
திட்டமுற்றவங்கயர்தாஞ் சிவனுரெதிரேதன்சிரத்தை
வெட்டவெட்டங்குரித்ததுவு மெய்ப்பத்தியதாம்விதியன்றே ()

காளமிடற்றர்நிகராஞ் சங்கரதாசையர்சீதரனே
மாளமுருக்கிப்பொடிசெய்த வயமுமடிவாலயமாச்சர்
நீளும்புகழ்கின்னரப்பிரமா நெடுவானடையநந்தியுடன்
மீளவழைத்தபெருந்திறலு மெய்ப்பத்தியதாம்விதியன்றே. (74)

மாதுபாகர்தமைக்கலியர் வருகநம்மூர்க்கெனவழைப்பத்
தீதிலாய்நீயெம்மூர்க்கு வருகென்றழைப்பச்சென்றதுவு
மோதுநீதிக்கல்லேய ருயர்வேதியர்க்கன்றொருசுணங்கால்
வேதமோதுவித்ததுவு மெய்ப்பத்தியதாம்விதியன்றே. (75)

தடையிற்சுரிகைச்சவுண்டையர் தமதாதரவாலுகந்தளிப்பப்
புடையுற்றயினிபிடிபிடியாப் புனிதர்வாங்கியருந்தியது
மடலிற்பெரியமுசுணடிச வுண்டையரழைப்பமுன்னிறந்த
விடையுக்கிரத்தோடெழுந்ததுவுமெய்ப்பத்தியதாம்விதியன்றே.

அடுத்தபுகழ்சேரியற்பகையா ரரிவைதனையன்றளித்ததுவுந்
தடுத்துமுனியுந்தந்தைபதந் தண்டிநவியாற்றடிந்தமையுங்
கொடுத்ததமிழ்ப்பாவலனூரன் றேகைபாலண்ணலைத்தூதாய்
விடுத்தவடிமைத்திறந்தானு மெய்ப்பத்தியதாம்விதியன்றே.(77)

நீலநக்கர்திருமனைவிநிமலர் மீதிலுமிழ்ந்தமையுஞ்
சீலமுற்றசிறுத்தொண்டர் திருந்தமகவையறுத்ததுவு
மாலதகற்றுமதிபத்தர் மதிசேகரற்குமுதற்படுமீன்
வேலைவிட்டன்புறுத்தியது மெய்ப்பத்தியதாம்விதியன்றே.(78)

ஐயமறவேயிறைவருக்குக் கலிகநாதரன்பினுடன்
செய்யதகைமைச்சிவலிங்கந் திருத்தமுடனேதரித்ததுவுந்
தையலருள்சேரவைசவை தன்னைக்கணவன்முனிந்தடிக்க
வெய்யசமணர்க்கானதுவு மெய்ப்பத்தியதாம்விதியன்றே. (79)

புரையிற்புகலிசம்பந்தர் புகழ்நாவரையராரூரர் [னிற்
நிரையினிரையேவெண்பொடியாகிய நேரிழையைப்படப்பையி
கரவிலரவாலிறந்தவனைக் கராவுண்மகவையக்கணமே
விரையவருகென்றழைத்ததுவு மெய்ப்பத்தியதாம்விதியன்றே.

கன்னிபாகரிரும்புற்கைக்காதல் பெருகுமாதரவாயச்
சென்னரோடன்றருந்தியதுஞ் சிலையாலெறிந்தசாக்கியரு
மன்னுமேமைசரிற்பெச்ச மாதேவியரெம்பெருமானுக்
கன்னேயாயினதும்பிறவும் பத்தியாமென்றறிவீரே. (81)

எழுவாரிதியின்புறக்கடலி விலங்குமணலைத்தொகைசெயினும்
வழுவாக்குருபத்தியின்மார்க்க மருவிப்பரனையடைந்தோர்க்கு
மெழுமாதரவாற்பெறுவோர்க்குமெண்ணின்றுகும்விதிமார்க்கம்
பழுதாச்சகலமுயல்வார்தம் பலனுதவன்முன்விதையாமே. (82)

காலம்விரும்பார்தொழில்விரும்பார்கன்மம்விரும்பாருடல்விரும்
சீலம்விரும்பார்தவம்விரும்பார் சித்தவிகாரத்திருக்கறியார் [பார்
கோலம்விரும்பார்விதிமார்க்கர் கொள்கைவிரும்பார்குருபத்தி
பாவின்புறுசங்கமலிங்க பத்திமார்க்கத்தவர்தாமே. (83)

விள்ளுங்குருபத்தியின்மார்க்கம் விரும்பார்விதிநூனெறிபிதற்றி
யெள்ளும்பதகவாதியர்வந் தெய்தியிடினுமூதறிவோ
ருள்ளமவையுட்கொள்ளாமலொருவப் படுவருபாதியெல்லாந்
தள்ளியொருநெற்பதர்புகினுந் தரியாதகற்றப்படுமாறே. (84)

வீறுந்தகைமைச்சித்தாந்தம் வேதாந்தமுந்தத்வாந்தமுடன்
கூறுங்கலாந்தம்போதாந்தங்குலவு நாதாந்தங்களெனத்
தேறுஞ்சமயவிதிமார்க்கத் திருக்காலுயிரைமயக்குறுத்து
மாறந்தமும்விட்டகன்ற கலாதமரும்பொருட்சங்கமமாமே. (85)

## வேறு.

குருலிங்கவேடமே மெய்ப்பொருளெனக்கொண்டுய்யாமற்
றிருவுந்துவிதிநூன்மார்க்கஞ் செப்புதல்கதியென்றோதி
லுருவுந்துமிருநோயாள ருறுமருந்துட்கொள்ளாமற்
பெருகுவாகடநூலோதிற் பிணியகன்றிடுவதின்றே. (86)

கத்தியசமயவாத விதிதருங்கதியைநீக்கி
முத்தியைவிரும்புவோர்கண் முகிழ்த்தமெய்ப்பத்தியாலே
மெய்த்தவமகேசர்பூசை யாவரும்விரும்பிச்செய்வ
ரத்தனுமவர்நாமென்றே யடியரையருச்சித்தானே. (87)

கதிர்முனிற்குமுதம்போன்றுங் கணிகைமுன்பணத்திபோன்று
மதிமுனிற்கமலம்போன்று மன்னைகண்டருண்டார்போன்றும்
விதிமதவாதநூல்கள் விதித்துரைப்போரைக்காணிற்
கதிதரும்பத்திமார்க்க ரெதிர்மொழிசழறிடாரே. (88)

கரவுறுகிரியைதானே கதியெனவிதிநூல்காட்டுங்
குரவர்கடமக்கு ஞானக்குரவர்க்குமுவமைகூறில்
விரவுமிவ்விருளைநீக்கும் விளக்குமூவுலகமெல்லாம்
பரவிருளனைத்துநீக்கும் பரிதியுநிகரதாமே. (89)

குறிதருலிங்கநீடு சங்கமங்குருவென்றேகன்
பிறிவதேனென்னின்மும்மைப் பெருகிருண்மலமுங்கன்மத்
துறுவினையிரண்டுமாயை யுருவமுமகற்றித்தானு
யறிவுருவுயிர்கட்கின்ப மளித்திடுநிலைமையாமே. (90)

மாயையும்வினையுமன்றி மலமிலையென்னின்மாயை
காயமாயறிவுநல்குங் காமியமின்பதுன்ப
மாயுயிர்க்கருத்துமூல வாணவமியற்கையாகி
யோய்வுறுமாயைகன்ம முதித்திடுங்கிடமதாமே. (91)

உயிரினுக்குவமைசெம்பாங் களிம்பிருண்மலமென்றோதுஞ்
செயிர்தருநாற்றங்கன் மஞ்சிவப்புடன்மாயையாகு
மயர்வறுமரிசிசூழ்ந்த தவிடுமிமுளையுமாங்கே
மயருறுமலங்கண்மூன்று மனுதியான்மாவுக்காமே. (92)

கடல்சிவமுயிர்நீருப்பு கருமலமுலவைகன்ம
மடரலைபோதமாகவமட்டியைம் பொறியிலுன்னைத்
துடர்வுறுகறங்குபோலச் சுழற்றுமும்மலங்கணீக்கித்
தடமலர்ப்பாதநல்குஞ் சற்குருவிமலனமே. (93)

சிவனுயிர்பாசமென்றே செப்புமுப்பொருளனுதி
சிவனருளமலனுகுஞ் சீவனஞ்ஞானபோதன்
சிவனையஞ்ஞானங்கூடாச் சீவனைக்கூடும்பாச
முவருறுமுதிதிநீரை யுததியைமருவிடாதே. (94)

சகலரைம்மலத்தோர்நான்கு மலம்பிரளையரைச்சாரு
மிகன்மலமூன்றும் விஞ்ஞானகலருக்கேயுமென்று
சகமலந்திரோதையொன்று மமுதமுண்ணுல்வர்க்காகுஞ்
சுகமலிசிவமெய்ஞ்ஞான சுத்தர்நின்மலவராமே. (95)

அகவிருடிரோதைமூல மலங்களையகன்றோர்காண்பார்
மகிழ்சிவானந்தஞான வயிந்துவநடஞ்செய்பாத
மிகலயனரியேருள னீசர்சாதாக்கியங்கள்
பகர்பரவிந்துநாதம் பரைபரசிவந்தானன்றே. (96)

## வேறு.

உன்னரியசுழிமுனையுட்சித்திரமும் வச்சிரமுமொன்றுளொன்றாய், மன்னிடுமொனந்தநடம்வச்சிரத்தின் மும்மலமுமகன்றோர்காண்ப, ரன்னவருட்சித்திரத்தின்ஞான நடமலங்கலைகளகன்றோர்காண்பர், நன்னெறியாஞ்சுழிமுனையிற்கலையகன்றோர் வயிந்துவநாடகங்கண்டோரே. (97)

## வேறு.

அத்தனுக்குரியமேனி நான்குளவாகுமோதிற்
சத்தியாருயிர்கணீடு தத்துவந்தகைமைசால
வைத்தவிச்சுவமிந்நான்கு மதிப்பருமுயிர்கட்கெல்லாம்
பெத்தமுத்தியினைநல்குங் கருணையின்பெருமையாமே. (98)

தேடுதல்திகைத்தல்தேறல் சிந்தித்தல்சென்றுகூடல்
வாடுதலுரைத்தல்மோன மலிவுறப்பற்றுமுற்றும்
வீடுதல்கரணநீத்தல் விழிமழைபொழிதலெல்லாந்
தாடலைபுரையுமேகத் தன்மையர்க்கின்மையாமே. (99)

பரசிவநிலையோர்நிட்டை தவறிடிற்பரையைச்சார்வார்
திரமிகுபரையோர்நிட்டை சிதைந்திடிற்குடிலைசேர்வார்
வரமிகுங்குடிலைநிட்டை வழுவினோர்கலாதிதேகம்
விரவுவார்துயராருத வினையுடலொழியும்போதில். (100)

ஒல்லையிலுலகரெல்லா மொவ்வொன்றுமெழுத்தையொற்றிச்
சொல்லுவர்பலவுஞ் சொன்னசொல்லெழுத்துணரார்போலப்
பல்லுயிரென்றகன்மப் பயனறிந்தேற்றுக்கொண்டே
யெல்லையிலருத்து மீசனியல்பினையுணர்ந்திடாரே. (101)

தனமனையடிமைகாணி தந்தைதாய்மைந்தர்சுற்ற
மனைவிதன்னுடலமெல்லா மதித்தரனுடைமையென்று
தனதெனுமுரைசிந்தித்த றவிர்ந்தவரருளைச்சேர்வ
ரெனதெனநினைவோரென்று மெழுபவமுழுகுவாரே. (102)

வேதமாகமமுந்தீக்கை விதிகளுஞ்சரியையாதி
மேதகுபாதநான்கு மிகுபதமுத்திநான்குந்
தீதிலாமாணமற்றுஞ் செப்பியவனைத்துமுன்றன்
போதநீருகநாதன் புந்திசெய்தமைத்ததாமே. (103)

அவ்வினிலுயிரீரெட்டு முதித்திடுமதிலோங்கார
முவ்வில்கவ்வாதியை யைந்துளவதில்நமவுண்டாகு
மவ்வுதவியயவ்வாதி யொருபதிசிவாயமூன்று
மொவ்வொருமறைவித்தாகு மோநமசிவயவென்றே. (104)

அகாரமுன்னெழுத்தீரெட்டு மருமதிக்கலையதாகு
முகாரமுன்னெழுத்தீராறு மொளிரினன்கலையதாகு
மெகாரமுன்னொலுநீக்கி யிசைந்திடுமெழுத்தோரெட்டும்
பகரழற்கலையதாகப் பகருமாகமங்கடானே. (105)

தத்துவமசிபதத்திற்ற கையதுநீயானுயென்
ருெத்தருயறைகணன்கு முரைத்திடுமதனுலெங்கு
நித்தனவ்வுயிரேபோல நீங்கிடாநிறைவினுலே
பத்தியிலினியசோகம் பாவிக்கப்படுவதாமே. (106)

ஆரணநெல்லோடொக்கு மாகமமரிசிபோலா
மாரணமுலகர்க்காஞ் சத்தினிபாதர்க்காகுஞ்சைவம்
பாரஃறிணைகணெல்லே பருகிடுமரிசிதன்னைச்
சீருயர்திணைகள்கொள்ளு மாறுபோற்றேறிடீரே. (107)

இரேசகந்தற்போக்கர்கு மிலங்கருளுதயந்தானே
யாசில்பூரகமதாகு மருஞ்சிவத்திடையருத
நேசமோடிரண்டிலாத நிட்டைகும்பகமதாகும்
பேசுமூவெழுத்துமொன்றும் பிரணவம்பிராணுயாமம். (108)

நீடும்பாரொளியேபானு நீரொளியாகுஞ்சோம
ஞடுந்தீச்சுடரிம்மூன்று நண்ணியெவ்வுயிர்க்குங்கண்ணுய்
மூடுந்தீவினையகற்று முச்சுடருதித்தொடுங்க
வாடுங்காணிறமதாகு மகிலமுங்கறுத்ததன்றே. (109)

இடையெனுநாடிகங்கை பிங்கலையமுனையாகுந்
திடமிகுசுழினைநாடி திகழ்சரஸ்வதியேயாகு
நடுநிலையுளத்தானந்த நதிகுடைந்தாடிற்பாத
மடைவர்கண்மேபெள்ளந் திரிந்துடல்வருந்துவோரே. (110)

## வேறு.

பூதசாரஞ்சுவர்க்கத்திற்போக நுகருமவர்க்குடலாம்
பூதங்காலாமெழுநரகம்புகு பாதகருக்குடலாகும்
பூதபரிணமத்தூலம்புவியிலுள்ளோர்க்குடலாகு
மோதுமிவைமூன்றையுமொருவுமுரவோரருளைப்பெறுவோரே.

இனியசுவர்க்கப்பயனுகர்வோ ரிமையோர்போகமுடிவளவும்
வினையநிரையத்தழுந்துமவர் விழியார்துயரமொழியளவும்
பனிமண்டலத்திற்சரிக்குமவர் பங்காலிமைத்துவிழித்திடுவோர்
மனவஞ்சகப்பற்றகன்றவரிம் மயலாறலையிற்சுழலாரே (112)

பலமாதவங்கண்முயன்றிடினும் பலமாநதியினனைந்திடனும்
பலமாகமங்கள்பயின்றிடினும் பலமாலகலாப்பயனுகு
மலமாசுலவாநம்போத மயக்காமூலகத்திருக்ககற்றி
நிலவார்முடியாரடியிணைக் கீழ்நின்றார்பவநோய்வென்றாரே.(113

## வேறு.

உன்னுவதொருகாலுன்னி யுரைத்திடலிருகாலுன்னிச்
சொன்னவைமடிவுறாமற்றொடர் வுறுமுயற்சிமுக்கான்
முன்னியமுயற்சிதன்னான் முடிந்திடலதுவொன்றாக
மன்னிடுமுயிர்கடோறு மருவிருவினையுமன்றே. (114)

சமையவாதங்கணீக்கித் தத்துவமித்தையாக்கி
நமையருவிருளையோட்டி நானெனுமையனீக்கி
யமைதரவென்னுண்மன்னு மாரருட்சோதிகாட்டி
யமைவருவின்பவெள்ளத் தழுத்தினனென்னையாசான். (115)

## வேறு.

மெய்விராவிய வீரசித்தாந்தத்தின்
சைவநீதியைக் கேட்குந்தபோதன
ரைவராலு மருளுமறிவிலாப்
பொய்வழாத விருளும்புகாதவர் (116)

பாசவஞ்சப்ப கையறுத்தாண்டிடுந்
தேசிகன்பதம் வாழிசிவாணையே
யாசிலண்டமனைத்துஞ் செலுத்திடு
மீசனன்பரிணை யடிவாழியே. (117)

மாரிநாளின்மதி முன்னரம்பைநீ
ரீரமாறவுலர்த்தி யெரித்தமு
தாரவூட்டுவபோ லென்னவாவினைச்
சார்வுநீத்தருடங் தவர்வாழியே. (118)






# லிங்கநிஷ்டை.

தான் தரித்துக்கொண்டிருக்கும் இந்த இஷ்டலிங்கமே நிர்மல ரஹிதமான சச்சிதானந்த பிரம்மமென்று நம்பி தனது தேகத்தை சுவற்றில் எழுதிய சித்திர தீபம்போல் அசைவற நெரியாக நிறுத்தி சூக்ஷ்ம தேகத்தால்வணங்கி வாக்கினல் தோத்திரஞ் செய்து மனத்தினல் தியானித்து பிறவித் துன்பத்தினிட உபாதியையும் பூமியின்கண் வந்தபின் படுந் துன்பத்தையும் நினைந்து பயந்து நடுநடுங்கிமெய்சோர்ந்து தேம்பித் தேம்பி அழுதகண்ணும் தொழுதகையுமாய் கண்கள் நீர்சொரிய நெக்குநெக்குருகி எனது பிறவித் துன்பத்தையொழித்து அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து மூல வாயுவை எழுப்பி புருவ மத்தியில் நிறுத்தி இரண்டு இலக்ஷியத்தின்ஒளியை ஒன்ருக்கி ஆக்ருண நுனியைவிட்டுத் திரும்பாமல் வைத்து அந்த நுனியை அகண்ட சராசரங்களெல்லாம் தோன்றித்தோன்றி அழிந்தாலும் தாமெப்போதும் அழியாமல் சமஸ்தமும் தாமாயும் தாமல்லவாயும் விளங்கி தனது

வாமகரத்தில் எழுந்தருளியிருக்கும் மஹாகன லிங்கத்தில் மறைத்து தன் எதிரில் தோன்ரு நின்றபிரம்மாண்ட பிண்டாண்டங்களை ஸ்தூல பஞ்ச பூதங்களிலொடுக்கி அந்த பஞ்ச பூதங்களை அபஞ்சீகிருத பூதங்களிலொடுக்கி அச்சத்தாதியாகிய தன் மாத்திரைகளை மாயையிலொடுக்கி அம் மாயையை பிரத்தியேகாத்மாவிலொடுக்கி அந்த பிரத்தியேகாத்மாவான தன்னையும் ஏகலிங்கமாகிய இஷ்டலிங்கத்தி லொடுக்கி தானென்ரும் அதுவென்றும் இரண்டில்லாமல் ஏகலிங்க நிஷ்டானுபவராய் இருக்க வேண்டியது.

திருச்சிற்றம்பலம்.



உ

# வீரசைவமென்பதின் கருத்து.

வாக்கு மனோகோசரமாய் யாவுமுதித்தொடுங்க இடமாயிரானின்ற மகாகனலிங்கத்தில் உதித்து பரம்பரையாய் வருகின்ற சமயமென்றும் இந்த சமயம் எல்லாசமயத்துக்கும் மேலானதென்றும் மஹாகனலிங்கத்தின் ஆனந்தத்திலுண்டாகிய தேவதைகளை வணங்கக்கூடாதென்றும் வணங்கினால் பலவிதகுணமாய்விரிந்து ஒன்றையும் நம்பாமற் போய்விடுவரென்றும் மற்றசமயங்களைப்போல் மத்தியில் எற்படாமல் அனாதியாய் எற்பட்டதென்றும் அந்த அனாதியாயுள்ள மஹாகனலிங்கத்தையே தரித்துக்கொள்வதென்றும் அதையே பூசிப்பதென்றும் அன்னையானவள் குழந்தையைமறந்து தானொரு பதார்த்தத்தையும் பொசிக்கமாட்டாததுபோல நைவேதித்து உண்ணல் முதலாகியதும் பக்தியோடுசெய்வதென்பதும் தான் அந்த மஹாகனலிங்கத்தை அடைவதற்குகூடாது எனெனில் ஆவரணசுத்திமறைப்பிருப்பதால்அதைக்கடப்பதற்காகதேகசுத்தி தத்துவசுத்தி ஆத்மசுத்திமுதலானதும்நடத்திக்கொண்டு மறைப்பைக்கடந்துபோகும் அவதாரத்தில் அங்கங்குகண்ட அனுபவத்தையே ஆசாரமாகவும் பூஜையாகவும் சிவசின்னமாகவும் ஸ்தூல சூக்ஷ்ம தேகாதிகளில் பொருந்தியிருத்தலால்தான் தரித்திருக்கும் மகாகனலிங்கமுகாந்தரமாகவே முப்பத்துமுக்கோடி தேவர்கள் போகத்தை அனுபவிப்பதன்றி அந்த தேவதைகளை வணங்கக் கூடாதென்பதும்அங்கலிங்கமானதை க்ஷணநேரமும்தேகத்தையும் மனத்தையும் விட்டு நீங்காதிருக்கவேண்டியிருப்பதால் திரிகரணசுத்தனாய் பிராரத்தவப்பொருளைமாத்திரம் பொசித்தலும் குருலிங்கஜங்கம நேயத்தையடைந்து புளியம்பழத்தோடுபோலவும் தாமரையில் ஜலம்போலவும் நெருப்பில் நீறுபோலவும் சேற்றில்பிள்ளைப்பூச்சிபோலவும்ஜெகத்திச்சையிற்பொருந்தாதிருத்தலும்ஒருவரதுபொருளைவருத்திவாங்கியுண்ணாதிருத்தலுமேயாம்

இதன் விலை அணா 1

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.



# இப்புத்தகம் வேண்டுவோர்

காஞ்சீபுரம் இராஜாம்பேட்டை,

## மு. சி. சின்னசாமி ஐயரிடத்திலும்,

காஞ்சீபுரம் பச்சகந்தையர்மடம்,

## தி. அண்ணாமலையரிடத்திலும்,

சிதம்பரம் மெயின்ரோட்டு,

## சபாபதி வாத்தியாரிடத்திலும்

விலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.

மேல்கண்ட விலாசத்தாருக்கு 0—1—6க்கு ஸ்டாம்பு அனுப்பினல் 1-புத்தகம் தபாலில் அனுப்பப்படும். 10-புத்தகம் ஒரேதடவையில் வாங்குபவர்கட்கு 1-புத்தகம் இனும் கொடுக்கப்படும்.

வியாபாரிகளுக்கு விலை சரசமாய் கொடுக்கப்படும்.

தங்கள் விலாசங்களை திருத்தமாய் எழுதி அனுப்பக் கோருகிறோம்.